ஸ்

ஸ்தூலகர்ணன்—ஒருயக்ஷன். இவனுலேயே சிகண்டி புருஷத்துவம்பெற்றது.

ஸ்தூலகேசன்—(ரி) பிரமத்துவரையென்பவள் தந்தை.

ஸ்தூலசிரசு— கவந்தனுக்குச் சாபமிட்டரிஷி.

ஸ்நுஷை—விதர்ப்பன்பாரி.

ஸ்மிருதி—தக்ஷன்புத்திரி. முதல் அங்கிரசன்பாரி. சிரத்தை யெனவும் பெயர்பெறுவள். சினீ, வாலி, குகு, ராகை, அநுமதி என்போர் இவள் புத்திரிகள்.

ஸ்மிருதிகள்—வேதார்த்தங்களைத்தழுவிய தருமசாஸ்திரங்கள். அவற்றுள் மனுஸ்மிருதி மிக்க பிரபலமுடையது. அது ஜகத்துச் சிருஷ்டி முதற் சகல விஷயங்களோடும் மாந்தர் தத்தம் வருணாச்சிரம தருமப்படி யொழுக வேண்டிய முறைகளெல்லாம் விரித்துரைப்பது.

பிருகஸ்பதிமிருதி, தக்ஷஸ்மிருதி, கௌதமஸ் மிருதி, யமஸ் மிருதி, ஆங்கீரசஸ்மிருதி, யாஞ்ஞவற்கியஸ்மிருதி, பிரசேதஸ்மிருதி, சாதாதபஸ்மிருதி, பராசரஸ்மிருதி, சம்வர்த்தஸ் மிருதி, ஔசனஸ் மிருதி, சங்கஸ்மிருதி, லிகிதஸ்மிருதி, ஆத்திரேயஸ்மிருதி, விஷ்ணுஸ்மிருதி, ஆபஸ்தம்பஸ்மிருதி, ஹாரீதஸ்மிருதி எனஸ்மிருதிகள்பதினெட்டு. இவையேயன்றி உப ஸ்மிருதிகளும் பதினெட்டுள. அவை கண்ணுவ-கபில-லோகித-தேவல - காத்தியாயன-லோகாக்ஷி- புத-சாதாதப-அத்திரி- பிரசேத-தக்ஷ-விஷ்ணு- விருத்தவிஷ்ணு-விருத்தமனு- தௌமிய-நாரத-பௌலஸ்திய -உத்தராங்கிதஸ்மிருதிகள்.

ஸ்வதை—பிதிர்தேவதைகள் பாரி.

ஸ்வயம்பிரபை— ஹேமையென்னும் அப்சரசு புத்திரி. அநுமான் முதலியோர் சீதையைநாடிச் சென்றபோது இவளிருக்கும்காஞ்சனபிலத்திற் பிரவேசித்து வெளிப்படவியலாது திகைத்துநிற்ப இவள் அவர்களை வெளிப்படும்படி உதவி புரிந்தவள்.

ஹ

—ஹ—

ஹம்சகீதை—ஹம்சரூபராகிய பிரமசாத்தியர்களுக்கு உபதேசிக்கப்பட்டகீதை.

ஹம்சன்—(ய) வசுதேவனுக்குச்சிதேவியிடத்துப்பிறந்த இரண்டாம் புத்திரன். உ. டிசிகன் சகோதரன். கௌசிகனெனவும் படுவன்.

ஹம்சை—மேருவுக்கு உத்தரத்திலுள்ள ஒருமலை.

ஹயக்கிரீவன்—க. குதிரை முகமும் மனுஷ்யதேகமும்உடையகற்கி அவதாரத்தின் பெயர். மதுகைடவர்தங்களை அபகரித்தொளிக்க அவைகளைமீட்குமாறு கொண்ட மூர்த்தம் ஹயக்கிரீவமூர்த்தமெனப்படும். உ. சோமகன் என்னும் தானவன்.

ஹயசிரை—வைசுவாநரன் புத்திரி. கிருது பாரி.

ஹரதத்தாசாரியர்— கஞ்சனூரிலே மதுசூதனாசாரியருடையபுத்திரனார். இவர் பூர்வசமயம் வைஷ்ணவம். பின்னர்ச் சைவசமய சாஸ்திரங்களைக்கற்றுச் சைவசமயியாயினர். அதுகண்டவைஷ்ணவர்கள், இவரைநோக்கி, உமதுசிவன் உண்மைப்பரம்பொருளாயின் நாங்களிடும்இருப்புப்படிமேனின்று சிவ பரத்துவ நாட்டக்கடவீர் என்ன, இவர் அதற்குடன்பட்டுவைஷ்ணவர்கள் பழுக்கக்காச்சிய இருப்புப் பாளப்படியேறிச் சிவபரத்துவஞ் சாதித்தவர். இவர் பூர்வநாமம் ஹரிதத்தர். இவராலியற்றப்பட்ட நூல்கள் சதுர்வேத தாற்பரிய சங்கிரகமுதலியன.

ஹ

"உயர்கா யத்திரிக் குரியபொரு ளாகலிற், றசரதன் மதலை தாபி த்தேத்தலிற், கண்ணன் கயிலை யி னண்ணிவின் றிரப்பப், புகழ்ச் சியி னமைந்த மகப்பே றுதவலி ற், றனது விழியுட னொராயிரங் கமலப், புதுமலர் கொண்டு பூச னையாற்றலின், அமைப்பருங்கடு விட மமுதுசெய் திடுதலிற், றெ ன்றிசைத் தலைவனைச் செகுத் தூயிர்பருகலின், அவுணர் முப்பு ர மழிய வில் வாங்கலிற், றக்கன் வேள்வி தகர்த்தருள் செய்தலி ற், றனஞ்செயன் றனக்குத் தன் படைவழங்கலின், மானுட மடங் கலைவலிதபக்கோறலின், மாயோ ன்மகவேஉவாகியகாலைத், தடமுலை திளைத்துச் சாத்தனைத் தருதலி ன், ஆழ்கடல் வரைப்பி னுன்றோ ரநேகர், அன்பு மீதூர வருச்ச னையாற்றலி, னுன்கிருசெல்வமு மாங்கவர்க் கருடலின், ஐயிரு பி றப்பினு மரியருச்சித்தலின், இரு வருமன்னமுமேனமு மாகிஅடி முடிதேடவழற்பிழம்கவிபாற், கங் கைசூழ் கிடந்த காசிமால் வரை ப்பிற், பொய்புகல் வியாதன் கை தம்பித்தலின், முப்புர மிறுப்பு ழி முகுந்தப் புத்தேண், மால்வி டை யாகி ஞாலமொடு தாங்கலி ன், அயன்சிர மாலை யளவில வ ணிதலின், ஞானமும் வீடும் பே ணினர்க்குதவலிற், பசுபதிப்பெய ரிய தனிமுதற் கடவுள், உம்பர்க ளெவர்க்கு முயர்ந்தோன், என்ப துதெளிகவியல்புணர்ந்தோரே' இது ஹரதத் தாசாரியர் அருளிச்



ஹ

செய்த சிவபரத்துவ நிருபண மொ ழிபெயர்ப்பு.

ஹரன்—க. சிவன். உ. (ரா) மாலிய வான் புத்திரன். விபீஷணன் மந் திரி.

ஹரி—விஷ்ணு.

ஹரிகேசன்—(ய) வசுதேவன் தம்பி யாகிய சியாமகன் மகன்.

ஹரிக்கிராமம்— விதர்ப்பதேசத்துள் ள ஒரு நகரம்.

ஹரிச்சந்திரன்—இவன் சூரியவம்சத் தில் இருபத்துநான்காம் சந்ததி. இ வன்திரிசங்கு புத்திரன். இவன்ம னைவிசந்திரதயன்புத்திரியாகியசந் திரமதி. புத்திரன் லோகிதாசன்.

ஹரிச்சந்திரன் மகாஉதார சீலனும் சிறிதுந்தவருத சத்தியவந் தனுமாக விளங்கினவன். இவனு டைய சத்தியவிரதத்தை வசிஷ்ட ர் இந்திரன் சபையில் எடுத்துப்பா ராட்டிய போது விசுவாமித்திரன் அவனைப் பொய்யனுக்குவேனென் று சபதங்கூறி இவனுடைய சத்தி யவிரதத்தைப் பரீக்ஷிக்கப் புகுந்தா ன். அவன் செய்த கொடிய வஞ்சப் பரீக்ஷைகளுக்கெல்லாம் இவன் சி றிதுங்கலங்காது நின்று தன் மனை மக்களைப்பிரிந்துதானும் புலையனுக் கடிமையாகிய வழியும் தான்கொ ண்டசத்திய விரதத்தைக் காத்து இன்று மழியாப்புகழ்படைத்தவன்

ஹரிணங்கன்—சந்திரன்.

ஹரிணி—ஒரப்சரசை.

ஹரிதன்—(க)யாவனுசுவன் புத்திர ன். இவன் தவத்தாற் பிரம ரிஷி யாயினவன். இவன்க்ஷத்திரியவர்ண த்தவனேயாயினும், இவன்வமிசத்

தார் பிராமணராயினர். அவர்கள் ஹரிதரெனப்படுவர்கள். ஆங்கிரச, அம்பரீஷ, யாவனுசுவ வமிசமாகப் பிறந்தார்கள். உ. (இ) லோகிதாசிய ன்புத்திரன். சம்பன் தந்தை.

**ஹரித்துவாரம்**—கங்காத்துவாரமெனப்படும் க்ஷேத்திரம். விஷ்ணுவாற்கொல்லப்பட்ட மது தனது மரணகாலத்திலே இத்தலம் புண்ணியஸ்தலமாகும்படி அநுக்கிரகிக்குமாறு விஷ்ணுவைவேண்ட அவ்வாருயது.

**ஹரியங்கன்**—(அ) சம்பன்புத்திரன்.

**ஹரியசுவன்**—க. (இ) திருடாசுவன் புத்திரன். நிகும்பன் தந்தை.

உ. (இ) அநரண்ணியன் புத்திரன். சுமனசன் தந்தை.

௩. (மி) திருஷ்டகேதுபுத்திரன்.

௪. (பு) பர்மியாசுவன்.

**ஹரிஹரராயன்**—இவன் துங்கபத்திராநதிதீரத்திலே காட்டைக்கெடுத்துநாடாக்கி வித்தியாநகரம் நிருமித்துஅங்கிருந்து அரசியற்றினவன். இவன் இற்றைக்கு ௫௱ வருஷங்களுக்கு முன்னிருந்தவன்.

**ஹரிஹரன்**- விஷ்ணுவும் சிவனுங்கூடிக்கொண்டருளிய வடிவம்.

**ஹரிஹரபுத்திரன்**-சாத்தனுர். இவர் ஐயனுரெனவழங்கப்படுவர். மோகினிவடிவங்கொண்டவிஷ்ணுவைச் சிவன்கூடித்தோற்றுவித்த புத்திரனுர் இவரே. இவர் அறநெறியிலிழுக்கினேரையொறுப்பவர். இவர்க்கு வாகனம் வெள்ளையானை. பூரணையும் புட்கலையுந்தேவிமார். இவர் தற்காலத்திலே கிராமதேவதையாகப் பூசிக்கப்படுவர். இவர்செண்டாயுதமும் கருங்கடல்வண்ணமு முடையவர்.

**ஹரீதன்**—விசுவாமித்திரன் புத்திரன். இவன்வமிசத்துப்பிராமணர்ஹரீதரெனப்படுவர்.

**ஹர்ஷன்**—தருமனுக்குச்சிரத்தையிடத்துப்பிறந்த புத்திரன். இவன்மனைவி நந்தை. சமன், காமன் என்போர் சகோதரர்.

**ஹலாதன்**—பிரஹலாதன் தம்பி. அநுஹலாதன் எனவும் படுவன்.

**ஹவ்வியவாகனன்**— க. கிரகபதி. உ. அக்கினி. சுசிபுத்திரன்.

**ஹவிர்ப்புக்கு**—பிரீதி. புலஸ்தியன் பாரி. இவள்விச்சிரவாவு தாய்.

**ஹவிர்யக்கியங்கள்**—சிரௌதாக்கினியிலேஅமைக்கப்படும் எக்கியபேதங்கள். அக்கினியாதேயம், அக்கினிஹோத்திரம், தரிசபூரணமாசம், ஆக்கிரஹாயணம், சாதுர் மாசியம், நிரூடபசுபந்தம், சௌத்திராமணி என ஏழாம்.

**ஹவிர்த்தானன்**—விஜயாசுவனன் என்னும் அந்தர்த்தானனுக்கு நபஸ்வதியிடத்துப் பிறந்தவன். இவன் பர்ஹிஷ்டதனென்னும் பிராசீனபர்ஹி, கயன், சுக்கிலன், கிருஷ்ணன், சத்தியன் என்னும் யஜன், ஜிதவிரதன் என்னும் அஜினன் என்னுமறுவர் புத்திரரைப் பெற்றவன். இவர்கள் பிரசேதசரெனப்படுவர்.

**ஹனுமந்தன், ஹனுமான்**—சுக்கிரீவன் மந்திரி. ராமர் தூதன். வாயுதேவனது அநுக்கிரகத்தால் அஞ்சனை வயிற்றிற் பிறந்தவன்.

**ஹஸ்திபுரம்**—ஹஸ்தினுபுரம்.

**ஹஸ்தினுபுரம்** — கௌரவர்களுக்கு ராஜதானி. இது ஹஸ்திகன் நிருமித்தநகரம். இந்நகரம் பிற்காலங்கங்கைகொண்டழிந்தது. இப்போதுள்ள "தில்லி" நகருக்குஅறுகாததூரத்திலிருந்தது.

ஹ

ஹஸ்தன்—(ய) வசுதேவனுக்கு யோசனையிடத்துப் பிறந்தவன்.

ஹஸ்திகன்—(பு) சுகோத்திரன் புத்திரன். இவனே ஹஸ்தினுபுரம் நிருமித்தவன். அஜமீடன், துவிமீடன் புருமீடன் என்போர் இவன் புத்திரர்.

ஹார்த்திக்கியன்—(ய) கிருதவர்ம.

ஹாஹா—ஒருகந்தருவன். தமிழிலே ஆகாவெனவழங்கப்படுபவன். (நைடதம்)

—ஹி—

ஹிரணியநாபன்—க. ஸ்ரீராமன்மகனுகிய குசன் வமிசத்திற் பிறந்தவன். இவன் ஜைமினிசிஷனுகிய யாஞ்ஞவற்கியரால் யோகமார்க்கம் உபதேசிக்கப்பட்டவன். (உ.) மைநாகன்.

ஹிரணியபுரம்—நிவாதகவச காலகேயர்களுடைய தேசம். அது சமுத்திரமத்தியிலுள்ளது.

ஹிரணியரோமன்—நான்குலோகபாலர்களுளொருவன்.

ஹிரணியாக்ஷன்— க. ஹிரணிய கசிபன் தம்பி. தந்தை கசியபப் பிரஜாபதி. தாய் திதி. இவனும் இவன் தமையனும் சனகசநந்தர்களுடைய சாபத்தினுல் ராக்ஷசர்களாகப்பிறந்த விஷ்ணு துவாரபாலர்களாகிய ஜயவிஜயர்கள். இவர்கள் தவத்தினுல் மிக்க கர்வமுடையர்களாய்த்தேவர்களுக்குத்துன்பஞ்செய்துவருங்காலத்தில் விஷ்ணுவாற் கொல்லப்பட்டவர்கள்.

உ. (ய) வசுதேவன்தம்பியாகிய சியாமகனுடையஇரண்டாம்புத்திரன்.

ஹி

ஹிடிம்பன்—வீமனுற் கொல்லப்பட்டஅசுரன். இடிம்பன்.

ஹிடிம்பை—ஹிடிம்பன் தங்கை. வீமன் இவளைக் காட்டகத்திற் கண்டுமணம்புரிந்தான். இவள்வயிற்றிற்பிறந்தபுத்திரன் கடோற்கசன்.

ஹிமசுதை—பார்வதி.

ஹிமசுதன்—மைநாகன்.

ஹிமபுரம்—ஓஷதிப்பிரஸ்தமென்னும் இமாலய ராஜதானி.

ஹிமவான், ஹிமவந்தன்— இமயமலை. மேருபுத்திரியாகிய மனோரமையென்னும் மேனையை மணம்புரிந்துபார்வதியையும், கங்கையையும் பெண்களாகப் பெற்று வளர்த்தவன்.

ஹிமாலயம்—இமயபர்வதம்.

ஹிம்சை- நிருதிமகள். அதர்மன்பாரி.

ஹிரணியகசிபன்—கசியபனுக்குத்திதியிடத்துப்பிறந்த புத்திரன். இவன் விஷ்ணுவால் நரசிங்காவதாரத்திற் கொல்லப்பட்டவன்.

இவன் மூவுலகங்களையும்ஜயித்தவன். இவன்மகன் பிரஹலாதன்.

ஹிரணியகர்ப்பன்—க. பிரமா. உ. விஷ்ணு.

ஹிரண்மயவருஷம் - நவவருஷங்களுளொன்று. இது இளாவிருதவருஷத்துக்கு வடக்கே யுள்ளது.

ஹிருசுவரோமன்—(மி) சுவர்ணரோமன் புத்திரன். இவன் இரண்டாஞ்சனகன் தந்தை.

ஹிருஷிகேசன்—விஷ்ணு.

ஹில்வலை— மிருகசிரிஷ நக்ஷத்திரத்தினது தலையிலுள்ள உபநக்ஷத்திரங்களைந்தும் இப்பெயர் பெறும்.

ஹீரன்— நைஷதம்செய்த ஹர்ஷருக்குத் தந்தை.

—ஹி—

ஹிருதிகன்— (ய) போஜன்புத்திரன். இவன் புத்திரர் தேவமீடன், சததன்வன், கிருதவர்ணன்.

—ஹூ—

ஹூணதேசம்— ஹூணர்களுடையதேசம். இவர்கள் யவனரெனவும்படுவர். (ஹூணர்—வெண்ணிறமுடையர்.)

ஹூஹூ—ஒருகந்தருவன். இவன் ஒரு சாபத்தால் முதலையாகிக் கிடந்துகஜேந்திரனென்னும் யானையைப்பிடித்தபோது விஷ்ணுவினாற் கொன்றிரக்ஷிக்கப்பட்டவன்.

—ஹே—

ஹேதி—சிருஷ்டிகாலத்திற்பிரமாவினால் படைக்கப்பட்ட ராக்ஷச அரசன். இவன்பாரி காலாக்கினியென்னும்பயை. புத்திரன் வித்தியுத்கேசன். இவன் மாலியவந்தன் முதலாகிய ராக்ஷச வம்சத்திற்கு மூலபுருஷன்.

ஹேமசந்திரன—(க)விசாலன் புத்திரன். (உ) சாலிவாகன சகாப்தம் ௧௧00 ளுஷத்திலிருந்த ஒரு சம்ஸ்கிருத கவி. இவர் தம்பெயரால் ஒரு நிகண்டு செய்தவர். (அதுஹேமசந்திரகோசம் எனப்படும்.)

ஹேமன்— (அ) ஜயத்திரதன் புத்திரன். பலியினது பாட்டன்.

ஹேமாத்திரி—சுமேரு மலை.

ஹேமாங்கதன்— (ய) வசுதேவனுக்கு ரோசனையிடத்திற்பிறந்த புத்திரன்.

ஹேமை—ஒரு அப்சரஸ்திரி.

ஹேமகூடம்— மேருவுக்குத் தென்பாகத்தில் பூமியினது நூனியிலேயுள்ளமலைகளுளொன்று.

ஹை

ஹைஹயன்— (ய) சதசித்து மூன்றாம்புத்திரன்.

—ஹை—

ஹைரம்பம்—ஒரு பருவதம். இது மணிபுரத்தருகே கபிலநதிக் குற்பத்திஸ்தானமாகவுள்ளது.

ஹைஹயம் — கார்த்தவீரியார்ச்சுனன் அரசுபுரிந்த தேசம். அது நருமதைநதிதீரத்திலுள்ளது.

# அநுபந்தம்.

**ஆறுமுகநாவலர்** — யாழ்ப்பாணத்தி லேநல்லூரிலே,வேளாளர்குலத்தி லே, சாலிவாகனசகம் ஆயிரத்தெ ழுநூற்றுநாற்பத் தைந்தாம் வருஷ த்திலே, கந்தப்பிள்ளையென்பவரு க்குப்புத்திரராக அவதரித்தவர்.

இவர், தமிழ், சம்ஸ்கிருதம், ஆங் கிலம் என்னும் முப்பாஷைகளையு ங்கற்று, அப்பாஷைகளிலே வியவ காரசத்திவந்தபின்னர், தமிழையே முற்றக்கற்கும் பேரவா வுடையரா யினர். அதனல், இவர் அக்காலத் திலே பிரபலவித்துவான்களாய்வி ளங்கிய சரவணமுத்துப்புலவர் மு தலியோரிடத்துச்சில இலக்கணவி லக்கியங்களைப்பாடங்கேட்டுத்,தமக் குப்பாடஞ்சொன்ன ஆசிரியர்களும் நாணத்தக்க நுண்ணியபுலமையும், கூர்ந்த விவேகமும், வாக்குவன்மை யும், ஒப்பற்ற ஞாபகசக்தியும்,ஆசார சீலங்களும், நற்குண நற்செய்கைக ளும், சிவபக்தியும்,சமயாபிமானமு ம், சபையஞ்சா ஆண்மையும் பெரி துமுடையராய் விளங்கினர்.

அக்காலத்திலே, இவர்ஆங்கிலக்க ல்வியினலே தமிழ்க் கல்வி அபிவி ருத்தி யடையாது குன்றிப்போவ தைநோக்கிப்பரிதபித்துவண்ணார்ப ண்ணையிலே ஒருதருமத் தமிழ்ப்பா டசாலை ஸ்தாபித்தார். அப்பாடசா லையிலே தாமும் இடை யிடையே உபாத்தியாயராகவிருந்து கல்விகற் பிப்பாராயினர். அதுகண்டு, நாற்றி சையினின்றும் சைவப்பிள்ளைகள் அங்கேசென்று தமிழ்கற்கத்தொட ங்கினர்கள். அதனல் அப்பாடசாலை ஓங்கிவளர்வதாயிற்று. அதுகாறும் பனையேட்டி லெழுதி வழுக்களோ டெற்றும் கற்பித்தும்வந்த நிகண்டு முதலிய நூல்களை வழுக்களைந்து சுத்த பாடஞ்செய்து காகித புஸ்த கமாக அச்சிடுவித்துத், தம்பாடசா லைமாணுக்கருக்கும் மற்ருேர்க்கும் உபயோகமாகும்படிசெய்தனர்.

காகிதபுஸ்தகங்கள் வரவே, தமி ழ்க்கல்வியபிமானம் வரவர ஓங்கு வதாயிற்று. இப்புஸ்தகங்களினலே அவருடைய பெயர் தமிழ்நாடெங் கும் வியாபித்து விளங்கிற்று.

பாடசாலைகளுக்குஉபயோகமாகும்படி வசனநடையிலே பாலபாடங்களெழுதி அச்சிடுவித்தார். எவருக்கும் உபயோகமாகும்படி பெரியபுராணமுதலியநூல்களை வசனமாக்கினார். கந்தபுராணம், வில்லிபுத்தூரர்பாரதம்,திருக்குறள் பரிமேலழகருரை, திருக்கோவையாருரை முதலிய அரும் பெரும் நூல்களையெல்லாம் வழுக்களைந்து சுத்தபாடமாக்கி அச்சிட்டுலகத்துக்குபகரித்தார். அவற்றுள், திருக்குறள் பரிமேலழகருரையும், திருக்கோவையாருரையும், இராமநாதபுரத்து மகாராசாவினது மந்திரியாராகிய பொன்னுச்சாமித்தேவர் இவரை தமது நாட்டிற் சந்தித்த பொழுது, "இந்நூல்களை ஆராய்ச்சிசெய்து சுத்தபாடமாக்கி அச்சிடவல்லார் தங்களையன்றிப்பிறரொருவரையுங்காண்கிலேம்" என்று கூறி, அதற்கு வேண்டும்பொருள்கொடுத்து இவரைக்கொண்டுதிருத்தி அச்சிடுவிக்கப்பட்டன.

திருக்குறள், திருக்கோவையார், நன்னூல்விருத்தியுரை, தொல்காப்பியச்சொல்லதிகாரம், சேனாவரையருரை முதலியநூல்கள் இவராற் றிருத்தி, அச்சிடப்படா திருக்குமாயின், இந்நாளிலும் அவற்றைநாம் ஓலைப் புத்தகங்களிலேயே படித்துச் சங்கடப்பட்டு மலையவேண்டியவர்களாவேம். இந்நூல்களைச் சுத்தபாடமாக்கித் தரும்பொருட்டு இவர் அவதாரஞ்செய்தாரென்றே நாம்கொள்ளுதல் வேண்டும். இவர் அவதாரஞ்செய்திலரேல்,அவற்றைநாம் இக்காலத்திற்காண்பதுமில்லையாம்.

இவர், யாழ்ப்பாணத்தில்மாத்திரமன்று, சிதம்பரத்திலும் ஒரு வித்தியாசாலை ஸ்தாபித்து, அதுவுந்தளராமல் நடைபெறும்பொருட்டு அதற்கும் முதனிதியமைத்துவைத்தார். அவ்வித்தியாசாலையும், யாழ்ப்பாணத்து வித்தியாசாலையைப்போலவே, தளராமல் நடைபெற்றுவருகின்றது. இவர் தமிழபிவிருத்தியின் பொருட்டும், சைவசமயாபி விருத்தியின் பொருட்டும் தம்மாயுட்கால முழுவதையும் போக்கியவர். இவர் தாமீட்டிய செல்வத்தையெல்லாம் ஒருசிறிதும் புறத்தே போகாவண்ணம் இவ்விரண்டற்குமே ஆக்கிவைத்தார். இவ்விரண்டையும் பரிபாலிக்கும் பொருட்டே தஞ்சுற்றத்தாருடைய தொடர்பை முற்றத்துறந்தார். ஏனைய கல்விமான்களைப்போலச் சைவசீலங்களைப்பேச்சளவிற் காட்டாமல், தம்மொழுக்கத்தாலும்எடுத்துநாட்டினவர். இறக்கும்போதுஇவருக்குவயசு 57. இவர் எவ்விஷயங்களையும் ஐயந்திரிபறவெடுத்துமாணவர்க்குப்போதிப்பதிலும்,சமயவிஷயமேயாயினும் பொதுவிஷயமேயாயினும் ஒன்றையெடுத்துத் தீரவிசாரித்துத் தர்க்க முறையாகப் பிரமாணத்தோடு எப்பெருஞ்சபையிலும் எத்துணைப் பெருமாற்றலுடையோரும் மற்றெத்திறத்தினரும் அங்கீகரிக்கும்வண்ணம் நாட்டிப் பிரசங்கிக்கும் சாதுரியத்திலும், கேட்போருள்ளத்தைப்புறஞ் செல்ல விடாது தம்மாட்டுக்கவரும் வாக்கு வன்மையிலும், கடன்மடைதிறந்தாலொப்பச் சொற்பஞ்சமின்றி வாக்குமழை பொழியும் அற்புத ஆற்றலிலும், இவர்க்கிணையாவாரொருவரை நாம் இன்னுங் காண்கிலேம்.

**ஆளவந்தார்**—இவர் வீரைமா நகரத்திலே விளங்கிய புலவர். ஞானவாசிட்டத்தைத் தமிழிலே ஈராயிரம் விருத்தங்களாற் பாடிய புலவர்.

இவர் ஜாதியிலே பிராமணர்.

**சரவணப்பெருமாளையர்**—இவர் திருத்தணிகையிலே வீரசைவர் குலத்திலவதரித்துச் சென்னையிலேயிருந்து தமிழ்க்கலைவளர்த்து இற்றைக்கு முப்பத்தைந்து வருஷங்களுக்குமுன்னே அருவுடம்பு கொண்டவர். நாலடியார், நன்னூல், நைஷதம், திருவள்ளுவ மாலை, நன்னெறி முதலிய நூல்களுக்குரையும், பூகோளதீபிகை, பாலபோத இலக்கண முதலிய நூல்களும் செய்தவர் இவரே. இவர் செய்த திருவள்ளுவமாலையுரை மிக்க திட்பநுட்பமமைந்து புலவோருள்ளத்திற்கு அதிசயானந்தம் பயப்பது.

இவர் செய்த நைஷதவுரை முற்றுப்பெற்றிருக்குமாயின் அதற்கிணை பிறிதொன்றெக்காலத்துமுளதாகாது.

**மீனாக்ஷிசுந்தரம்பிள்ளை**—இவரும் ஆறுமுகநாவலரும்ஒரே காலத்தவர்கள். இவர் மகாவித்துவான் என்னும்பட்டாபிதானம் பூண்டவர். இவர் பாடும் வன்மையிலே கம்பரினுஞ்சிறந்தவரென்னலாந்தகுதிவாய்ந்தவர். இவர் பாடிய பாடல்களுக்குக்கணக்கில்லை.

இவர் ஆசு மதுரம் சித்திரம் வித்தாரம் என்னும் நால்வகையும் பாடவல்லவர். இவர் நாகைக் காரோணபுராணம், மாயூரபுராணம், குடந்தைப்புராணமுதலிய ஐம்பது நூல் பாடினர். இவர் திரிசிரபுரத்திலே பிறந்து திருவாவடுதுறை மடாலயத்திலே கலைபயின்று அம்மடத்து ஆதீனவித்துவானாகி அநேக மாணாக்கரைச்சேர்த்துத் தமிழ்க்கலை பயிற்றி அவர்மூலமாகத் தென்னாடெங்கும் தமிழ்ப்பயிர் வளர்த்தவர்.

**வில்லிபுத்தூராழ்வார்**—தமிழிலே விருத்தப்பாவாற் பாரதம்பாடிய புலவர். இவர் ஆட்கொண்டான்என்னுஞ் சனியூர் அரசனுக்கு அபிமானப்புலவர். இவர் ஆயிரம்வருஷங்களுக்கு முன்னுள்ளவர். இவர்சரித்திரத்தை "வரந்தருவான்" என்பதனுட்காண்க.



## குறிப்பெழுத்துவிளக்கம்.

அ—அணுவமிசம்.
அம்—அங்கதேசராஜவமிசம்.
இ, இக்ஷு—இக்ஷுவாகுவமிசம்.
கா—காசிராஜவமிசம்.
குரு—குவமிசம்.
த—தநுவமிசம் (தானவர்)
திதி—திதிவமிசம். (தைத்தியர்.
நரி—நரிஷியந்தவமிசம்.
பா—பாஞ்சாலவமிசம்.
பூ—பூருவமிசம்.
பிரி—பிரியவிரதவமிசம்.
பிர—பிருகதிஷவமிசம்.
ம—மகததேசராஜவமிசம்.
மி—மிதிலைராஜவமிசம்.
ர, ரா—ராக்ஷசவமிசம்.
ரி—இருஷிகள்.
வை—வைகிருதம்.

# பிரமா.


மரீசி
அத்திரி
அங்கிரசன்
புலஸ்தியன்
புலகன்
கிருது
பிருகு
வசிஷ்டன்
தக்ஷன்
கசியபன்
சந்திரன்
பிருகஸ்பதி
உதத்தியன்
அகஸ்தியன்
விச்சிரவாவு
கிம்நரகிம்புருஷர்
வாலகில்லியர்
கவி
தாதா
விதாதா
சத்தி
விவசுவதன்
புதன்
தீர்க்கதமன்
பரதத்துவாஜர்
சுக்கிராசாரி
மிருகண்டன்
பிராணன்
பராசரன்
வைவசுவதமநு
புரூரவன்
கௌதமன்
துரோணன்
(இளாவிளையிடம்) குபேரன்
(கைகசியிடம்) க. இராவணன் உ. கும்பகர்ணன் ரு. விபீஷன்
(புஷ்போற்கடையிடம்) க. மகோதரன் உ. மகாபார்சுவன்
(ராகையிடம்) க. கரன் உ. தூஷணன் ரு. திரிசிரன்
மார்க்கண்டன்
வேதசிரசு
வியாசன்
உசேனசு
சுகன்
சதாநந்தன்
அசுவத்தாமன்
சரத்துவந்தன்
கிருது
சண்டமார்க்கன்
தமிஷ்டிரி
துவஷ்டா
பத்திரகர்மன்
(புத்திரிகள்) தேவயானை அரசை
இக்ஷுவாகு
சிருகன்
சரியாதி
திஷ்டன்
திருஷ்டன்
கருசன்
நரிஷியந்தன்
விருஷத்திரன்
நபகன்
கவி
குக்ஷி
நிமி
தண்டன்
உத்தானபரு
ஆநர்த்தன்
பூரிசேனன்
சுகன்னிகை
சித்திரசேனன்
நாபாகன்
ககுஸ்தன்
மிதலன்
அக்கினிவேசன்
அம்பரீஷன்
குவலயாசுவன்
(ஜனகன்இவர்கள் வமிசத்தவனே)
(அக்கினிவேசியாயனபிராமணகுலம் தோன்றியது)
விரூபன்
மாந்தாதா
ரதிதரன்
(இவ்வமிசத்தார் ரதீதரகோத்திரபிராமணர்)
திரிசங்கு
அரிச்சந்திரன்
சகரன்
பகீரதன்
ரகு
தசரதன்
ராமன்
பரதன்
லக்ஷுமணன்
சத்துருக்கினன்

(ந)

# புரூர்வன்

## யது

- சகஸ்திரஜித்து
  - சதசித்து
    - மகாஹயன்
    - வேணுகயன்
    - ஹேஹயன்
      - ⋮ மகிஷ்மந்தன்
        - ⋮ கிருதவீரியன்
          - கார்த்தவீரியார்ச்சுனன்
            - ஜயத்துவசன்
              - தாளஜங்கன்
            - சூரசேனன்
            - விருஷணன்
            - மதன்
            - சூரன்
- குரோஷ்டு
  - ⋮ சதவிந்து
    - பிருதுசிரவன்
      - ⋮ சியாமகன்
        - விதர்ப்பன்
          - குசன்
          - கிருது
            - சாத்துவதன்
              - போஜன்
                - பஜமானன்
                  - போஜன்
                    - ஹிருதிகன்
                      - கிருதவர்மா
                      - சததனு
                      - தேவமீடன்
                        - சூரன் — வசுதேவன் — கிருஷ்ணன் — பிரத்தியும்னன் — அநிருத்தன்
              - அந்தகன்
                - குகுரன்
                  - விருஷ்ணி
                    - ⋮ தவித்தியோதன்
                      - ஆகுகன்
                        - தேவகன்
                          - தேவகி
                        - உக்கிரசேனன்
                          - கஞ்சன்
                - சுசி
                - கம்பளபர்கிஷன்
              - தேவாபிருதன்
                - பப்பிரு
              - விருஷ்ணி
                - சுமித்திரன்
                - யுதாசித்து
                  - சினி
                  - அனமித்திரன்
                    - நிம்மனன்
                      - சத்திராஜித்து
                        - சத்தியபாமை
                      - பிரசேனன்
                    - சினி
                      - சத்தியகன்
                        - யுயுதானன்
                          - சாத்தியகி
                    - பிரசினி
                      - சுவபர்க்கன்
                        - அக்குரூரன்
                      - சித்திரகன்
              - திவ்வியன்
              - பஜி
              - பஜமானன்
          - உரோமபாதன்
            - ⋮ சேதி
- தவன்
- ரிபு



ஆயு
தீமந்தன்
அமவசு
சிராயு
சுருதாயு
நகுஷன்
க்ஷத்திரவிருத்தன்
ரசி
ரம்பன்
அநேநசு
வீமன்
யதி
யயாதி
சம்யாதி
ஆயாதி
உத்தமன்
சுகோத்திரன்
குசன்
ரபசன்
சுத்தன்
காஞ்சனன்
சுஹோத்திரன்
கம்பீரன்
சுசி
ஜந்நு
யது
துர்வசு
துருஹியன்
அனு
பூரு
காசியன்
குசன்
கிருத்சினமதன்
கிருது
ரஜதன்
சுமந்திரன்
வன்னி
பப்பிரு
சபாநலன்
தன்வந்திரி
சுகனன்
திரிககுத்தன்
அஜகன்
கோதானன்
சேதன்
காலாநலன்
பிரதர்த்தன்
சௌனகன்
கிருதகிருத்தியன்
பலாகாசியன்
கரந்தமன்
அந்தன்
சிருஞ்ஜயன்
குவலயாசுவன்
குசிகன்
துரியசித்து
காந்தன்
புரஞ்ஜயன்
அலர்க்கன்
துஷ்யந்தன்
(சுவீகாரம்)
கர்மியன்
ஜனமேஜயன்
பார்க்கவன்
குசாம்பன்
குசநாபன்
அதூர்த்தரஜன்
வசு
திருதன்
மகாகாலன்
பார்க்க பூமி
காதி
கயன்
குருதாமன்
துர்த்தமன்
மகாமனு
விசுவாமித்திரன்
ஆசிரிதன்
பிரசேதசு
உசீநரன்
திதிக்ஷு
பாண்டியன்
சோழன்
சேரன்
(இவன்புத்திரர்
மிலேச்சராயினர்)
பலி
சிபி
சிருகன்
நடன்
கிருமி
சுவிரதன்
விருஷதர்ப்பன்
சுவீரன்
கேகயன்
மத்திரன்
அங்கன்
வங்கன்
கலிங்கன்
புண்டரன்
சுப்பிரமன்
ததிவாகனன்
தசரதன்
ரோமபாதன்
அதிரதன்
கர்ணன்
விருஷசேனன்